# கம்பராமாயணம்

(இராமாவதாரம்)






## யுத்த காண்டம் - 1

[ 1. கடல் காண் படலம் முதல் 14. அங்கதன் தூதுப் படலம் வரை ]

பதிப்பாசிரியக் குழுவினரால்
பல பிரதிகளை ஒப்பு நோக்கிப் பரிசோதித்து
வெளியிடப்பெற்றது



வெளியிடுவோர்
**எஸ். ராஜம்**
5, தம்புச் செட்டித் தெரு
சென்னை-1

1959

18-ஐ

# உள்ளுறை

18-ஐ



4. வீடணன் அடைக்கலப் படலம் ... 40-59

வீடணன் உரையை மதியாது, இராவணன் பெருஞ் சினம் கொண்டு, தம்பியைக் கடிந்து, துரத்துதல் 1; வீடணன் துணைவருடன் வானில் எழுந்து நின்று, மீண்டும் பலப்பல உறுதி மொழிகள் கூறுதல் 9; 'பிழை பொறுத்தருள்க!' என்று கூறி, வீடணன் இலங்கை விட்டு ஏகுதல் 12; தன்னுடன் வந்த அமைச்சர் நால் வருடன், வீடணன் இராமன் இருக்கும் கடற்கரைக்கு வருதல் 13; வீடணன் வானரத் தானையைக் கண்டு, வியந்து உரைத்தல் 15; மேலே செய்வன குறித்துத் துணைவருடன் வீடணன் உசாவுதல் 17; இராமனைக் காணுமாறு மந்திரிமார் உரைக்க, வீடணன் உடன் பட்டு, மகிழ்ந்து கூறுதல் 18; 'இருளில் இராமன்பால் செல்வது முறை அன்று' என எண்ணி, அவர்கள் ஒரு சோலையில் தங்குதலும், சூரியன் உதயமாதலும் 23; இராமன் கடற்கரைப் பக்கம் வந்து, அங்கு உள்ள கானல் முதலியவற்றை நோக்குதல் 24; இயற்கை நிகழ்ச்சிகள் சிலவற்றால் இராமன் உணர்ச்சிவசப்பட்டு நிற்றல் 28; அங்கு வந்த சுக்கிரீவன் முதலியோரது சொற்களால் மெலிவு நீங்கிய இராமன் தன் இருப்பிடத்திற்குத் திரும்புதல் 32; வீடணன் வானரத் தானையின் பக்கம் வந்து சேர்தல் 33; வீடணனைக் கண்ட வானர வீரர்கள் அவனைச் சூழ நின்று அதட்டி, பலவாறு பேசுதல் 34; அனுமன் ஏவலால், மயிந்தன் துமிந்தன் என் போர் வீடணனைச் சார்தல் 39; மயிந்தன் அரக்கரை வினவ, வீடணனது துணைவனான அனலன் விடை பகர்தல் 41; பகை வரைக் காக்குமாறு தம்பிக்கும் சேனைக்கும் பணித்து, மயிந்தன் இராமனுக்குச் செய்தி தெரிவிக்கச் செல்லுதல் 46; தன் அடி பணிந்து, 'உணர்த்தும் உரை ஒன்று உண்டு' என்ற மயிந்தனை, செய்தி சொல்லுமாறு இராமன் பணித்தல் 47; மயிந்தன் தான் கண்டதும் கேட்டதும் கூறுதல் 49; இராமன் அருகில் இருந்த நண்பர்களை நோக்கி, 'வந்தவனைச் சேர்ப்பதா? விலக்குவதா? ஆய்ந்து கூறுமின்' என உரைத்தல் 55; சுக்கிரீவன் தன் கருத்தைத் தெரிவித்தல் 56; இராமன் சாம்பனை வினவ, அவன் தன் கருத்தைத் தெரிவித்தல் 69; இராமன் கேட்க, தானை நாயகன் நீலன் தன் கருத்தைத் தெரிவித்தல் 75; ஏனைய மந்திரக் கிழ வரும், 'ஏற்றுக்கொள்ளுதல் குற்றமாம்' என்று, ஒருபடித்தாகக் கூறுதல் 82; அனுமனின் கருத்தை உரைக்குமாறு இராமன் தன் நோக்கினால் குறிப்பித்தல் 83; மாருதியின் பேருரை 84; அனுமன் கூறியன கேட்டு உவந்து, இராமன் வீடணனை ஏற்றுக்கொள்வது பற்றி எடுத்துரைத்தல் 103; இராமன் பணித்தபடி, சுக்கிரீவன் வீடணனை அழைத்துவரச் செல்லுதல் 118; சுக்கிரீவனது வருகையின் நிமித்தத்தைத் துமிந்தன் வீடணனுக்கு உரைக்க, அவன் சுக்கிரீவனது எதிரே செல்லுதல் 119; சுக்கிரீவனும் வீடணனும் ஒருவரை ஒருவர் தழுவுதலும், இராமன் அவனுக்கு அபயம் தந்ததைச் சுக்கிரீவன் தெரிவித்தலும் 120; அபயம் அளித்தது குறித்து வீடணன் மகிழ்ந்து கொண்டாடுதல் 122; இராமனிடம் விரைவில் செல்லுமாறு சுக்கிரீவன் கூறுதல் 127; இருவரும் இராமன் இருப்பிடத்திற்குச் செல்லுதல் 128; வீடணன் இராமனைக் கண்டு, அவன் திருவடிகளில் விழுந்து வணங்குதல் 129; இராமன் வீடணனுக்கு இருக்கை கொடுத்து, இலங்கையின் அரசையும்

உரைத்தல் 14; மாலியவானின் அறிவுரை 32; அப்பொழுது, மகோதரன் வந்து, இராவணனுக்குச் சொல்லிய உறுதிமொழிகள் 34; மகோதரன் சொல்லியதை இராவணன் புகழ்ந்து, கும்ப கருணனை அழைத்துவரப் பணித்தல் 42; வீரர்கள் சென்று, கும்பகருணனைத் துயில் எழுப்புதல் 43; ஓசை முதலியவற்றால் எழுப்ப இயலாமல், இராவணனுக்கு உரைக்க, அவன் குதிரைகளைச் செலுத்துமாறு கூறுதல் 47; குதிரைகளால் துகைக்கவும், கும்ப கருணன் இனிது உறங்குதல் 48; குதிரைகளாலும் எழாமை தெரிந்த இராவணன், ஆயுதங்களை எறிந்தாவது துயில் எழுப்பிக் கொணர்க எனல் 49; ஆயிரம் வீரர் முசலம் கொண்டு கன்னத்தில் அடிக்க, கும்பகருணன் துயில் எழுதல் 51; எழுந்த கும்பகருணன் உணவு முதலியன உட்கொள்ளுதல் 54; கும்பகருணனின் தோற் றம் 57; தமையன் அழைத்த செய்தி கேட்டு, இராவணன்முன் சென்று கும்பகருணன் வணங்குதல் 65; தம்பியைத் தழுவி, அவனுக்கு உணவு முதலியன அளித்து, போர்க்கோலம் செய்தல் 67; 'போர்க் கோலம் செய்தது ஏன்?' என, கும்பகருணன் வினவு தல் 72; செய்தி தெரிவித்து, போருக்குச் செல்லுமாறு இராவ ணன் கூறுதல் 73; போர் நேர்ந்தமைக்கு வருந்தி, கும்பகருணன் இராவணனுக்கு அறிவுரை கூறுதல் 74; 'போருக்கு அஞ்சினை; உன் வீரம் வெறுவிது' என்று இராவணன் சினந்து மொழிதல் 85; இராவணனை வணங்கி, 'பொறுத்தி' என்று கூறி, கும்பகருணன் போருக்குச் செல்ல விடை பெறுதல் 89; கும்பகருணனோடு பெரும் படை செல்லுமாறு இராவணன் பணித்தல் 94; படைகளின் பெருக்கம் 96; கும்பகருணன் தேரில் ஏறுதல் 99; ஆயுதங்களும் உணவு முதலியனவும் சேனைகள் சுமந்து செல்லுதல் 100; தேரில் வந்த கும்பகருணனை இராமன் நோக்கி, அவனை இன்னார் என்று வீடணனிடம் கேட்டல் 104; வீடணன் கும்பகருணனது தன் மையை எடுத்துரைத்தல் 109; வீடணன் உரைத்தது கேட்டு, அருகிருந்த சுக்கிரீவன், 'இக் கும்பகருணனை நம்முடன் சேர்த்துக் கொள்ளுதல் நலம்' என, இராமனும் அதற்கு இசைதல் 122; 'கும்பகருணனை அழைத்தற்குச் செல்வார் யார்?' என்று இராமன் கேட்க, வீடணன் உடன்பட்டு, இராமனிடம் விடைபெற்றுச் செல்லுதல் 123; தன்னை வந்து வணங்கிய வீடணனுக்குக் கும்ப கருணன், 'வந்தது தகுதி அன்று' என்று கூறுதல் 124; இராமனைச் சரண்புகுமாறு வீடணன் கும்பகருணனுக்கு உரைத்தல் 134; 'இராவணனுக்காக உயிர் ஈதலே எனக்கு ஏற்றது; நீ இராமனைச் சேர்' என, கும்பகருணன் எடுத்துரைத்தல் 149; வீடணனைக் கும்பகருணன் தழுவி விடை கொடுக்க, வீடணனும் அவனைப் பணிந்து மீளுதல் 162; வீடணன் செல்லுதல் கண்டு, கும்ப கருணன் கண்ணில் உதிர நீர் பெருக நிற்றல் 164; கும்பகருணனது கருத்தை இராமனுக்கு வீடணன் கூற, இராமன், 'விதியை வெல் லல் ஆகாது' எனல் 165; அரக்கர் சேனை வானர சேனையை வளைத்தல் 167; கும்பகருணன் தேரை ஓட்டி வந்து, போர் தொடங்குதல் 171; நீலன் கும்பகருணனுடன் பொருது தோற்றல் 179; நீலன் தளர்ந்தது கண்டு, அங்கதன் வந்து பொருதல் 182; கும்பகருணன்-அங்கதன் உரையாடல் 186; அங்கதன் எறிந்த தண்டு பல துண்டமாதல் 190; அங்கதன் தோல்வியுற, அனுமன் அங்கு வந்து எதிர்த்தல் 191; அனுமன் போர் செய்து, நிற்க,

அங்கதனை வானரர் எடுத்துச் செல்லுதல் 194; அனுமனுக்கும் கும்பகருணனுக்கும் வீரவாதம் 195; கும்பகருணனின் வலிமை கண்டு, அனுமன் அப்பால் போதல் 197; குரக்குச் சேனையின் அழிவு 199; இலக்குவன் கும்பகருணனுடன் போரிடுதல் 203; இலக்குவனது வில் ஆண்மையை வியந்து, கும்பகருணனும் நெருங்கிப் பொர வருதல் 223; அனுமன் தோள்மேல் இலக்குவன் ஏறிச் சென்று, பொருதல் 225; கும்பகருணனின் வீர வார்த்தையும், இலக்குவன் மறுமொழியும் 229; இருவரும் செய்த பெரும் போர் 232; கும்பகருணன் சூலம் ஏந்தி, தேரிலிருந்து தரையில் குதிக்கவே, இலக்குவனும் அனுமன் தோளை விட்டு இறங்கி, தரையில் நின்று பொருதல் 240; களத்தில் உற்ற அழிவுகள் 244; கும்பகருணன் மற்றொரு திசையில் சென்று, சுக்கிரீவனோடு பெரும் போர் விளைத்தல் 249; சுக்கிரீவன்மேல் கும்பகருணன் எறிந்த சூலத்தை அனுமன் முறித்தல் 254; அனுமனின் ஆற்றலை வியந்த கும்பகருணன், அவனைப் போருக்கு அறைகூவ, அனுமன் மறுத்தல் 257; மீண்டும் சுக்கிரீவனும் கும்பகருணனும் பொர, சுக்கிரீவன் சிறிது உணர்வு நீங்குதல் 259; உணர்வு இழந்த சுக்கிரீவனைக் கும்பகருணன் இலங்கைக்கு எடுத்துச் செல்லுதலும், வானரரும் வானவரும் வருந்துதலும் 263; அரக்கன் சுக்கிரீவனை எடுத்துச் சென்ற காட்சி 266; அனுமன் தான் முற்கூறிய உரையை நினைந்து, போர் செய்யாது, அரக்கன் பின்னே கையைப் பிசைந்து செல்லுதல் 268; நிகழ்ந்தன அறிந்ததும், இராமன் சென்று, கும்பகருணன் செல்லும் வழியைச் சரங்களால் தடுத்தல் 269; அம்பு மதிலை நெருங்கிய கும்பகருணன் அதனைக் கடக்க இயலாது திரும்பி நோக்குதலும், இராமனைக் கண் எதிரே காணுதலும் 273; கும்பகருணன் கோபத்தோடு இராமனை இடித்துரைத்தல் 275; இராமன் சபதம் கூறி, கும்பகருணன்மீது அம்பு எய்தல் 281; நெற்றியில் அம்பு பட்டுக் கும்பகருணன் மயக்கம் அடைதலும், குருதி நீர் பட்டுச் சுக்கிரீவன் தெளிவு பெறுதலும் 283; இராமனைக் கண்ணுற்ற சுக்கிரீவன் மானமும் நாணமும் கொண்டவனாய், கும்பகருணனது மூக்கையும் காதையும் கடித்து எடுத்துத் தமரைச் சேர்தல் 285; சுக்கிரீவனைக் கண்டு, யாவரும் மகிழ்தல் 287; அறிவு வர, கும்பகருணன் நிகழ்ந்தவை உணர்ந்து, பெருஞ் சினம் கொண்டு, வாள் ஏந்திப் போரிடுதல் 290; குரக்குச் சேனையின் அழிவைச் சாம்பன் இராமனுக்குப் புலப்படுத்துதல் 300; இராமன் சென்று, கும்பகருணனுடன் பொருதல் 301; கும்பகருணன் வாள் இழந்து நின்ற சமயத்தில், இராவணன் அனுப்பிய பெரும் படை உதவிக்கு வந்து சேர்தல் 307; வந்த சேனையை இராமன் எதிர்த்தலும், கும்பகருணன் சூலப்படை கொண்டு தோன்றுதலும் 309; நால் வகைப் படையும் இராம பாணத்தால் ஒழிய, கும்பகருணன் தனித்து நிற்றல் 312; தனி நின்ற கும்பகருணனை நோக்கி, அவன் விருப்பத்தை இராமன் வினவுதலும், அவன் விடை பகர்தலும் 319; கும்பகருணனுக்கும் இராமனுக்கும் பெரும் போர் நிகழ்தல் 325; கும்பகருணன் இரு கையும் இழந்தமை 333; இரு கை இழந்தும், வானரரைக் கலக்கிய கும்பகருணனின் கால்களை அம்பினால் இராமன் அறுத்தல் 340; கைகால் இழந்து, பூமியில் இருந்த கும்பகருணன், மலைகளை வாயால் கவ்வி, உள்ளிருந்து எழும் காற்று விசையில் வீச, இராமன் கை நடுங்குதல் 345; உள்

தேவர்கள் தம் நங்கைமாரோடு வானத்தில் வந்து கூடுதல் 37; இரு பக்கத்துச் சேனையும் எதிர்ந்து பொருதல் 38; அரக்கரால் நிலை கெட்டு ஓடிய வானரரைத் தடுத்து, வானர வீரர் காத்தல் 53; நீலன் முதலிய வானர வீரரின் போர்த் திறம் 54; நிருதர் சேனை நிலை தளர, இந்திரசித்து தனியாகவே நின்று, பெரும் போர் விளைத்தல் 61; எதிர்ப்பாரை இன்றி வென்று, இந்திரசித்து நின்றது கண்ட சுக்கிரீவன் மராமரம் எடுத்து எறிதலும், இந்திரசித்து அம்பினால் பொடியாக்குதலும் 69; அப்பொழுது அனுமன் அங்கு வந்து, மலை எடுத்து எறிய, அதனை இந்திரசித்து அம்பினால் சிதறச் செய்தல் 72; இந்திரசித்திற்கும் அனுமனுக்கும் நிகழ்ந்த வீர உரை 73; இந்திரசித்து அம்பு விட, அனுமன் மலை ஒன்றை ஏந்தி, வீர மொழி கூறி, அவன்மேல் வீசுதல் 78; அனுமன் எறிந்த மலை இந்திர சித்தின் மார்பில் பட்டுப் பொடியாதலும், அவன் அனுமன்மேல் பல அம்பு விடுதலும் 80; அம்பு பட்டு அனுமன் தளர, அப்பொழுது நீலன் அங்கு வந்து பொருதல் 83; நீலன் நடுக்கமடைய, அங்கதன் வந்து, மலைகளை எறிந்து பொருது, இந்திரசித்தின் அம்பினால் சோர்ந்து தரையில் விழுதல் 85; சேனைகளின் சிதைவு கண்ட இலக்குவன் வீடணனை நோக்கி ஒன்று உரைத்தல் 87; வீடணன் இலக்குவனது கருத்திற்கு இசைந்தவனாய், 'இவனை நீயே வென்று, துயரை நீக்கவேண்டும்' எனல் 89; ஒற்றனை வினவி, இந்திர சித்து இலக்குவனை அறிதல் 90; இராக்கதத் தலைவர்கள் இலக்கு வனை நெருங்குதல் 91; சூழ்ந்தாரை அம்புகளினால் அழித்து, இலக் குவன் வாகை சூடுதல் 92; சேனைகள் தொலைய, தனித்து நின்ற இந்திரசித்து தேரில் வந்து, இலக்குவனை நெருங்குதலும், அனுமன் வேண்டுகோளின்படி அவன் தோளில் அமர்ந்து இலக்குவன் பொருதலும் 100; இருவருக்கும் நிகழ்ந்த பெரும் போர் 102; தேர் அழிந்தமையால், வேறொரு தேரில் ஏறி, இந்திரசித்து பொரு தல் 121; இலக்குவன் கணைக்கு ஆற்றாது தளர்ந்த இந்திரசித்து, போர் செய்யாது, வில்லை ஊன்றி நிற்றல் 126; அனுமன் இந்திர சித்தின் தேரை அழித்தல் 127; மற்றொரு தேரில் ஏறி, இந்திர சித்து இலக்குவனோடு பொருதல் 128; இந்திரசித்து தேர் ஏறி வருந்தோறும் இலக்குவன் அவற்றை அழிக்க, அது கண்டு தேவர் கள் மகிழ்தல் 129; அப்பொழுது அரக்கவீரர்கள் முந்தி வந்து எதிர்த்தல் 131; எதிர்த்தாரை இலக்குவன் அம்பினால் அழித்தல் 135; இலக்குவனது ஊர்தியான அனுமன் விளைத்த போர் 140; மயங்கி வீழ்ந்த வானரர் தெளிந்து எழுந்து பொருதல் 144; இந்திரசித்தின் தேரை அங்கதன் அழித்தல் 147; வேறு தேரில் ஏறி, அங்கதனை நெருங்கிய இந்திரசித்தை வானரர் சூழ்ந்து பொரு தல் 150; இலக்குவன் எண்ணற்ற அரக்கரை மாய்த்தல் 153; இந்திரசித்து சினம் பொங்கியவனாய், தேர்ச் சக்கரக் காவலரிடம் இலக்குவனது திறலை வியந்து உரைத்தல் 154; கேட்ட அந்த அரக்கர், 'நீவிர் இருவீரும் ஒரு திறத்தினிர்' என மொழிதல் 158; இந்திரசித்தும் இலக்குவனும் எதிர் எதிர் பொருதல் 159; இலக்கு வன் அம்பினால் அடிபட்ட அரக்கர்களின் நிலைமை 163; இந்திர சித்தின் கவசத்தை இலக்குவன் பிளத்தல் 170; இந்திரசித்து தெளிவடையும் முன்னதாக, அவனது தேர்க் காவலர் இருவரும் சினம் கொண்டு பொருதல் 171; இலக்குவன் அவ் இருவரின் தேர், புரவி, முதலியவற்றை ஒழிக்கவே, அவர்கள் தண்டுகொண்டு அனு

இராமனைத் தொழுது, இலக்குவன் போருக்கு எழுதல் 44; அங்கதன் ஆர்ப்பும், இராமனின் சங்கநாதமும் 45; அரக்கர் சேனையை இலக்குவன் அழித்தல் 46; இராமன் அம்பு சொரிதலால் படைகள் யாவும் மடிய, இந்திரசித்து தனித்து நிற்றல் 57; 'எவ்வாறு பொர நினைக்கின்றீர்?' என, இராம இலக்குவரை இந்திரசித்து வினவுதல் 58; 'உன்னைக் கொல்லச் சபதம் செய்துள்ளேன்' என்று இலக்குவன் மறுமொழி பகர்தல் 60; 'உன்னை யான் கொல்வது உறுதி' என, இந்திரசித்து மொழிதல் 61; 'என் தம்பிமார்க்கும் சிற்றப்பனுக்கும் உங்கள் இருவரது குருதி நீரால் கடன் செய்வேன்' என இந்திரசித்து கூறுதல் 64; 'வீடணனே உங்கள் எல்லோருக்கும் இறுதிக் கடன் செய்வான்' என, இலக்குவன் மொழிதல் 65; இந்திரசித்தும் இலக்குவனும் கடும் போர் புரிதல் 66; இலக்குவனது வெற்றி கண்டு, ஆரவாரம் செய்யுமாறு இராமன் பணிக்க, வானரர் ஆர்த்தல் 77; இந்திரசித்து வானில் மறையவே, இலக்குவன், 'அவன்மேல் அயன் படை விடுவேன்' என இராமனிடம் சொல்ல, இராமன் அதைத் தடுத்தல் 78; தெய்வப் படையை விட எண்ணிய இந்திரசித்து மறைந்து இலங்கைக்குச் செல்லுதல் 80; அஞ்சி ஓடியதாக எண்ணி, வானரர் மகிழ்ந்து ஆரவாரித்தல் 81; இந்திரசித்தின் உட்கருத்தை உணராத இராம இலக்குவர் போர்க்கோலம் களைந்து நிற்றல் 83; சூரியன் மறைதல் 85; 'சேனைகட்கு உணவு விரைவில் கொணர்க' என, வீடணனுக்கு இராமன் சொல்ல, அவனும் ஒருப்பட்டுச் செல்லுதல் 86; சேனைகளைக் காக்குமாறு இலக்குவனுக்கு இராமன் கட்டளையிட்டு, தெய்வப் படைகளுக்குப் பூசனை இயற்றச் செல்லுதல் 88; நிகழ்ந்தவற்றை இந்திரசித்து இராவணனுக்குக் கூறி, மேல் தான் செய்யப் போவது குறித்தும் அறிவித்தல் 89; இந்திரசித்தின் கருத்திற்கு இசைந்த இராவணன், மகோதரனுக்கு இட்ட கட்டளை 93; மகோதரன் மகிழ்ந்து, பெருஞ் சேனையோடு போர்க்குச் சென்ற காட்சி 95; அரக்கர்க்கும் வானரர்க்கும் நிகழ்ந்த பெரும் போர் 103; மடிந்த வானரரும் அரக்கரும் தேவர்கள் ஆதல் 108; இலக்குவன் பெரும் போர் விளைவித்தல் 110; கும்பகருணன் களத்தில் இட்ட தண்டைக் கொண்டு அனுமன் பொருதல் 111; சுக்கிரீவன் முதலிய வானரத்தலைவர், ஒருவரை ஒருவர் காணாராய், அரக்கரின் படைக் கடலில் அமைதல் 119; அனுமனுக்கும் அகம்பனுக்கும் நிகழ்ந்த போர் 120; 'வில்லினால் அனுமனை வெல்ல இயலாது' என்று எண்ணிய அகம்பன் தண்டு கொண்டு அனுமனுடன் பொருதல் 131; அகம்பனை அனுமன் வீழ்த்துதல் 137; இலக்குவன் முதலியோரைப் பற்றிய செய்தி தெரியாமையால், அனுமன் துயருடன் தேடிச் செல்லுதல் 138; அரக்கர் பெருஞ் சேனையில் அங்கதன் முதலியோர் நீண்ட தூரம் இடையிட்டு நின்று பொருதல் 139; சென்ற அனுமன் தூரத்தே இலக்குவன் போர் செய்யும் குறிகளைக் காணுதல் 142; தன்னை வந்து வணங்கிய அனுமனைத் தழுவி, இலக்குவன் சேனையின் நிலைமையை உசாவுதல் 149; அனுமனின் மறுமொழி 151; அனுமன் உரைத்தவண்ணம் இலக்குவன் சிவன் படையை வீசுதல் 153; முக்கணன் படையால் அரக்கர் சேனை இரிய, வானரர் மகிழ்ந்து, இலக்குவனை வந்து கூடுதல் 155; தூதர் சென்று, இராவணனுக்கும் இந்திரசித்திற்கும் செய்தி கூறுதல் 157; 'இதுவே ஏற்ற காலம்' என எண்ணிய இந்திரசித்து பிரமாத்திரம் விடும் பொருட்டு வேள்வி

என்பது உணர்ந்த வீடணன், அதனைத் தீர்க்கும் உபாயத்தை ஆராய்தல் 6; 'இறவாதவர் யாரேனும் உளரோ?' என, வீடணன் கொள்ளி ஒன்றைப் பற்றிச் சென்று தேடுதல் 9; அனுமனைக் கண்ட வீடணன், அவனது உடலில் தைத்த அம்புகளை நீக்கி, நீர் தெளித்து, மயக்கம் தெளிவித்தல் 10; உணர்வு பெற்ற அனுமன், இராமனைப் பற்றி உசாவி அறிதல் 12; 'சாம்பனே வாழ்விக்க வல்லவன்' என்பது உணர்ந்து, இருவரும் சாம்பனைத் தேடிச் சென்று அடைதல் 14; அம்பினால் வருந்தி மயங்கிய நிலையிலும், சாம்பன் செவி வாயிலாக இருவரின் வருகையை உணர்ந்தவனாய்ச் சிந்தித்தல் 17; வந்துள்ளாரை வினவி அறிந்து, அனுமனின் வருகையால் சாம்பன் பெரு மகிழ்வு கொள்ளுதல் 19; இராமனின் நிலையையும் சாம்பன் உசாவி அறிந்து, 'விரைந்து போய் மருந்து கொணர்க' என அனுமனுக்குக் கூறுதல் 21; மருத்துமலைக்குச் சாம்பன் வழி கூறுதல் 24; அங்குள்ள மருந்துகளின் அடையாளம் முதலியவற்றைச் சாம்பன் தெரிவித்தல் 27; 'மருந்து கொணர்வேன்' என, அனுமன் பெரு வடிவு கொண்டு, விசைத்து எழுதல் 30; அனுமனின் வேகத்தால் நிகழ்ந்தவை 33; வேகத்துடன் உயரத்தில் செல்லும் அனுமனைக் கண்ட வானுலகத்தவரின் கூற்று 36; அனுமன் சென்ற வேகத்தில் தோன்றிய ஒலி 40; தேவர் முதலியோரின் மகிழ்ச்சி 41; இமயம் கடந்து, கயிலையைக் கண்டு கைகூப்பி, அனுமன் செல்லுதல் 43; உமையின் வினவும், ஈசனது உரையும் 45; ஏம கூடம் முதலியவற்றைத் தாண்டி, அனுமன் மேரு மலையின்மீது போதல் 46; மேரு மலையில் அனுமன் பிரமன் முதலிய தேவர்களைக் கண்டு, வணங்கிச் செல்லுதல் 48; உத்தரகுருவில் சூரியனைக் கண்டு, 'உதயமாயிற்றே' என்று அனுமன் வருந்துதலும், உண்மை உணர்ந்து துன்பம் தணிதலும் 54; உத்தரகுரு நாட்டைக் கண்டு, அனுமன் அப்பால் போதல் 57; நீலமலைக்கு அப்பால் மருத்துமலையை அனுமன் காணுதல் 59; மருத்துமலையைக் காக்கும் தெய்வங்களின் அனுமதி பெற்று, அனுமன் அம் மலையைப் பெயர்த்தல் 61; 'மருந்துகளைத் தெரிந்து எடுத்தால், காலம் வீணாகும்' என்று எண்ணிய அனுமன், மருத்துமலையையே கையில் ஏந்தி, வான் வழி விரைந்து செல்லுதல் 63; அனுமனை அனுப்பியபின், சாம்பனும் வீடணனும் இராமனைச் சென்று காணுதல் 65; தொழுத கையினராய் இரங்கி, அருகே இருந்த இருவரது நலனையும் இராமன் வினவுதல் 68; 'இப்போது செய்யத் தக்கது யாது?' என்று இருவரையும் உசாவி, இராமன் பல படியாக வருந்துதல் 69; 'சாம்பனது உரையை நம்பினேன்' என்று இராமன் மகிழும்போது, வட திசையிலே ஒலி எழுதல் 92; வட திசையில் உற்ற சண்ட மாருதத்தால் நேர்ந்த குழப்பம் 93; பேரொலி செய்து, அனுமன் மலை கொண்டு வந்த தோற்றம் 96; 'வந்தான்' என்பதற்குள்ளாக, அனுமன் வந்து, நிலத்தில் அடி இடுதல் 99; மருத்துமலையினின்று வந்த காற்றுப் பட்டவுடன், யாவரும் உயிர் பெற்று எழுதல் 100; இராமன் தம்பியைத் தழுவித் துயர் தீர்தலும், தேவர்கள் முதலியோர் மகிழ்தலும் 104; அயன்படை இராமனை வலம் வந்து, தொழுது அகல்தல் 107; இராமன் அனுமனை மார்புறத் தழுவுதலும், அனுமன் இராமன் திருவடிகளை வணங்குதலும் 108; இராமன் அனுமனைப் புகழ்ந்து, வாழ்த்துக் கூறுதல் 110; மற்றையோர்களும் அனுமனை வாழ்த்துதல் 114; மருத்துமலையை உரிய

இராமனைத் தேற்ற எண்ணிய இலக்குவனின் பேச்சு 62; அது கேட்ட சுக்கிரீவன் விரைந்து எழுந்து, 'இலங்கைமேல் குதித்து யாவரையும் அழிப்போம்' என்று கூறி, நகரின்மேல் தாவ முற்படுதல் 70; சுக்கிரீவனைத் தொடர்ந்து ஏனை வானரரும் ஏகலுற்ற போது, அனுமன், இந்திரசித்து அயோத்தி சென்றமையைத் தெரிவித்தல் 73; தாயரையும் தம்பியரையும் குறித்த துயரால் இராமன் மனம் அழிந்து, வருந்திப் புலம்புதல் 74; 'இந்திரசித்தைத் தொடரும் உபாயம் உண்டோ?' என இராமன் வினவுதல் 80; 'பரதனை இந்திரசித்தினால் வெல்ல இயலாது' என்று இலக்குவன் கூறுதல் 81; இந்திரசித்தின் விமானத்தைத் தொடர்ந்து அயோத்திக்குச் செல்லும் பொருட்டு, தன் தோள் மேல் ஏறுமாறு இராம இலக்குவரை அனுமன் வேண்டுதல் 83; வீரர் இருவரும் அனுமன் தோள்மேல் ஏற எழுதலும், வீடணன் தொழுது, 'இது மாயமே; உண்மை தெரியலாம்' எனல் 87; இராமன் ஒருப்படவே, வீடணன் வண்டு உருக் கொண்டு சென்று, அசோக வனத்தில் சீதையைக் காணுதல் 89; சீதையின் நிலையையும், நிகும்பலை நோக்கி அரக்கர் சேனை செல்வதையும், கண்டு, வீடணன் இந்திரசித்தின் சூழ்ச்சியை உணர்தல் 91; வீடணன் வந்து, இராமனை வணங்கி, சீதையைக் கண்டமையைக் கூறி, இந்திரசித்தின் எண்ணத்தையும் எடுத்துரைத்தல் 94-95.



இராமன் வீடணனைத் தழுவி, அவன் செய்கையைப் புகழ்ந்து கூறுதல் 1; இளவலோடு சென்று, இந்திரசித்தின் யாகத்தைச் சிதைப்பதற்கு இராமனிடம் வீடணன் விடை அருள வேண்டுதல் 2; இலக்குவனை இராமன் தழுவி, அம்பு விடுவது குறித்துச் சிலவற்றை உபதேசித்தல் 3; இலக்குவனுக்குத் திருமாலின் வில்லும், கவசம் முதலியனவும், இராமன் கொடுத்தல் 8; போர்மேல் செல்லும் இலக்குவன், இராமன் விடை கொடுத்தருள, அவனை வணங்கி, வானரத் தலைவர்களோடும் நிகும்பலை நோக்கிச் செல்லுதல் 11; இலக்குவனைப் பிரிந்து நிற்கும் இராமனின் நிலை 14; நிகும்பலையை அடைந்த வானரர் அரக்கர் சேனையைக் காணுதல் 15; நாண் ஒலி முதலியன இன்றி இருந்த அரக்கர் சேனையைக் கண்டு, வானரர் விண் கிழிய ஆர்த்தல் 21; அரக்கர் சேனையுடன் வானரர் பொருதல் 23; 'வேள்வியைச் சிதைக்காது, சேனைகளுடன் காலம் போக்குதல் தகாது' என வீடணன் இலக்குவனுக்கு உரைத்தல் 27; தேவர் முதலியோரும் வியந்து காண, இலக்குவன் அரக்கர் சேனையை அழித்தல் 28; படுகளக் காட்சிகள் 32; இலக்குவன் போரினால் இந்திரசித்தின் யாகம் கெடுதல் 44; தன் சேனை நிலைகுலைதலை இந்திரசித்து காணுதல் 52; வேள்விக் கனல் முதலியன சிதைந்தமை கண்டு, இந்திரசித்து மனம் வெதும்புதல் 57; இந்திரசித்து நியமம் குலைந்து, வருந்திப் புலம்புதல் 61; அப்போது, வானர வீரரால் அரக்கர் சேனை நிலைகுலைதல் 66; இந்திரசித்துக்குச் சினம் மிகுமாறு, அனுமன் எள்ளி நகையாடிப் பேசுதல் 69; அனுமன் முதலியோரை இந்திரசித்து இகழ்ந்து கூறுதல் 79; இந்திரசித்து பொருதற்குச் சன்னத்தனாய்த் தேர் ஏறி, சங்கு முழக்கி வருதல் 85; குரங்குகள் நாண் ஒலி கேட்டு இரிதலும், அனுமன் மலை ஏந்தி

விரும்பி வேண்டுதல் 62; 'இலக்குவனுக்கு ஏற்ற துணை நீயே' என்று இராமன் ஏதுக்காட்டி உரைக்க, அனுமன் மாறு பேசாது, இளவலைப் பின் தொடர்தல் 64; இலக்குவனுக்குத் துணையாக வீடணனையும் இராமன் அனுப்புதல் 67; சுக்கிரீவன் முதலியோரும் இலக்குவனுடன் சென்று, வானரத் தானையைக் காத்தல் 68; இராமன் வில் ஏந்தி, முன்னணியில் வந்து பொருதல் 69; தேவர், முனிவர், முதலாயினுர் இராமனை ஏத்தி, ஆசி மொழிதல் 71; இராமன் தனியே நின்று பொரும் ஆற்றல் கண்டு, அரக்கர் வியந்து கூறுதல் 73; அரக்கர் வந்து சூழ, இராமன் நாண் எறிதலும், சூழ்ந்த அரக்கரிடையே துன்னிமித்தம் தோன்றுதலும் 76; இராமன் அம்பு பொழிதலும், அதனுல் அரக்கர் சேனை பட்ட பாடும் 79; தன்னை மொய்த்தாரை இராமன் அம்பு எய்து, அழித்த வகை 108; அரக்கர் வியக்கும் வண்ணம் இராமன் சாரிகை திரிதல் 113; வன்னி ஏனைய தலைவர்களை நோக்கி, பாய்ந்து பொருமாறு கூறுதல் 128; அரக்கர் படை உருத்து எழ, இராமனும் சரமழை சிந்துதல் 131; அரக்கர் சேனை கடும்போர் புரிந்து, இராம பாணத்தால் மடிதல் 137; தேவர்கள் சிவபெருமானை அடுத்து, இப் போர் பற்றி வினவுதலும், 'இராமனே வெல்வன்' எனச் சிவபெருமான் அருளுதலும் 149; சிவன் கூற்றை நான்முகனும் ஒருப்பட்டுப் பேச, அப்பொழுது இராமன் வாளியால் அரக்கரின் தலைகளைக் குவித்தல் 153; அரக்கரின் அழிவும், அமரர்களின் மலர் மழையும் 157; சிதறி ஓடிய அரக்கர் படையைத் தடுத்து, தலைவர்கள் வேகத்துடன் பொர, இராமனும் கடுமையாகப் பொருதல் 158; அரக்கர் தப்பிச் செல்லாவண்ணம் இராமன் சர மதில் அமைத்தல் 168; இராமனது அம்பின் வெம்மையால் அரக்கர் பெரிதும் அழிந்து, திகைத்துக் கூறுதல் 169; ஒருமுகமாக இராமனை எதிர்க்குமாறு வன்னி அரக்கர்க்குக் கூறுதல் 176; அரக்கர் இராமனை வளைத்து அடர்த்தல் 178; காந்தருப்பம் என்னும் படையை இராமன் விடுதல் 180; மூலச்சேனை கணத்தில் அழிதல் 182; தீவுகள் பலவற்றிலிருந்தும் வந்து கூடியுள்ள வீரர்கள், 'ஒருங்கு திரண்டு பொருவதா? தனித் தனிப் பொருவதா?' என்று, ஒருவரை ஒருவர் வினவுதல் 183; 'சேர்ந்து பொர வேண்டும்' என்று வன்னி சொல்ல, யாவரும் உடன்பட்டு, இராமனை வளைந்து, பொருதல் 186; இராமனும் முன் நின்று, அம்பு மழை பொழிய, அரக்கர் சேனை அழிந்துபடுதல் 194; அரக்கர்க்கு எங்கும் இராமனுகத் தோன்றும்படி பொருதது 212; இராமனது வில்-திறம் 214; சிவன் முதலிய தேவர்களும் முனிவர்களும் இராமனது வில்லாண்மை கண்டு வியப்புறுதல் 219; பத்துக் கோடி வீரர் பட, எஞ்சியோர் தெய்வப் படைகளை வீசிப் பொர, இராமனும் அவற்றைத் தெய்வப் படைகளால் மாற்றுதல் 222; பூமி தேவியின் பெரு மகிழ்ச்சி 226; தேவர்கள் முதலியோர் துயர் தீர்ந்து, இராமனை வாழ்த்துதல் 227; யாவரும் ஏத்த நின்ற இராமனின் தோற்றம் 229; இலக்குவன் இராவணனோடு பொரும் இடத்திற்கு, இராமன் செல்லுதல் 231-232.

முனிவர் பாராட்டும் வண்ணம் தொடர்ந்து இராவணன் பல படை தூரக்க, இராமன் அவற்றைப் பிறைமுக அம்புகளால் பிளத்தல் 99; இராவணன் விட்ட மயன் படையைக் காந்தர்ப்பக் கணையால் இராமன் போக்குதல் 102; இராவணன் தண்டாயுதம் எறிய, அம்பினால் இராமன் அதைப் பொடியாக்கல் 105; இராவணன் மாயையின் படையை விட, முன் இறந்த அரக்கர்கள் உயிர் பெற்றெழுந்தனர் போலத் திரண்டு ஆரவாரித்தல் 109; மாயப் படையால் பூதங்களும் பேய்களும் தோன்றுதல் 116; மாயத்தினால் தோன்றியவர் பல வகைப் படைகளை ஏந்தி நிற்றல் 117; மாயப் படையின் விளைவு கண்டு, இராமன் மாதலியை வினவுதல் 120; 'மாயப் படை உன்னால் ஒரு நொடியில் நீங்கும்' என மாதலி உரைக்க, இராமன் ஞானக் கணையால் அதனை ஒழித்தல் 121; இராவணன் சூலம் கொண்டு வீசுதல் 125; 'சூலத்தை வெல்வாய்!' எனத் தேவர்கள் இராமனை வேண்டுதல் 128; சூலத்தின்மேல் எறிந்த படைகள் பயனிலவாக, இராமன் செய்வகை அறியான் போல் இருத்தல் 129; இராமனை நெருங்கிய சூலம் அவனது உங்காரத்தால் பொடியாதல் 131; வானோரின் பெரு மகிழ்ச்சி 133; இராமனை 'வேத முதல்வனோ?' என இராவணன் கருதுதல் 134; 'யாரேயாயினும் எதிர்த்து வெல்வேன்' என எண்ணிய இராவணன் நிருதியின் படையை விடுதல் 136; நிருதிப் படையைப் போக்க, இராமன் கருடப் படையை விடுதல் 141; இராவணன் சரம் பல விட, இராம பாணம் அவற்றை வீழ்த்தி, அவன் மார்பில் புகுதல் 145; இராவணன் விஞ்சைகள் தளர்தலும், இராமன் வீரமும் வலியும் மிகுதலும் 147; பிறை முக அம்பினால் இராமன் இராவணன் தலையை அறுக்க, அது கடலில் போய் விழுதல் 148; இராவணனது அற்ற தலை மீண்டும் முளைத்து, இராமனை ஆரவாரத்துடன் வைது அதட்டுதல் 151; கடலில் வீழ்ந்த இராவணன் தலையும் ஆரவாரித்தல் 153; தன் தோள்மேல் சரம் விட்ட இராவணனது கையை இராமன் அறுக்க, அதுவும் முன்போல் முளைத்தல் 154; அற்ற தன் கையை எடுத்து இராவணன் மாதலிமேல் வீச, அவன் நிலைகலங்குதல் 157; அடுத்து, மாதலியேல் இராவணன் தோமரம் வீச, இராமன் அதனைத் துகளாக்குதல் 159; இராவணனது தலைகளை இராமன் ஓய்வு இன்றி அறுக்க, அவை பல இடங்களிலும் சிதறி வீழ்தல் 161; அற்று வீழ்ந்த இராவணனது தலைகளின் கண்களைப் பேய்கள் தோண்டுதல் 164; இராவணன் வாள் முதலியன வீச, இராமன் அவனை வெல்லும் வகை குறித்துச் சிந்தித்தல் 165; இராவணனது மேனியை முற்றும் அம்பினால் இராமன் மூட, அவன் நிலைகலங்கி வருந்துதல் 167; தேரின்மேல் இராவணன் உணர்வு இழந்து கிடக்க, அவனது சாரதி தேரை விலக்கி நிறுத்தலும், இராமன் அம்பு எய்தலைத் தவிர்தலும் 170; 'தெளிந்தால், இவனை வெல்லுதல் அரிது; இப்பொழுதே இவனைக் கொல்வாய்' என்ற மாதலிக்கு, இராமன், 'அது நீதி அன்று' என மறுத்தல் 173; உணர்வு பெற்ற இராவணன், 'தேரைத் திருப்பி நிறுத்தியதற்காகச் சினந்து, வாளால் சாரதியை எறிய முற்படுதல் 175; சாரதி அவனைப் பணிந்து, தேரைத் தான் திருப்பி நிறுத்திய காரணத்தைத் தெரிவித்தல் 179; இராவணன் சாரதிமேல் இரக்கம் கொண்டவனாய், தேரை மீட்கச் செய்து, இராமன் எதிருறல் 182; இராமன் ஓர் கணை சிந்தி, இராவணனின் வில்லைத் துண்டித்தல் 184;

## கடவுள் வாழ்த்து

'ஒன்றே' என்னின், ஒன்றே ஆம்;
'பல' என்று உரைக்கின், பலவே ஆம்;
'அன்றே' என்னின், அன்றே ஆம்;
'ஆம்' என்று உரைக்கின், ஆமே ஆம்;
'இன்றே' என்னின், இன்றே ஆம்;
'உளது' என்று உரைக்கின், உளதே ஆம்;
நன்றே, நம்பி குடி வாழ்க்கை!
நமக்கு இங்கு என்னோ பிழைப்பு? அம்மா!

# 1. கடல் காண் படலம்

எழுபது வெள்ளம் சேனையோடு சென்று, இராமன் கடலைக் காணுதல்

ஊழி திரியும் காலத்தும் உலையா நிலைய உயர் கிரியும்,
வாழி வற்றா மறி கடலும், மண்ணும், வட பால் வான் தோய,
பாழித் தெற்கு உள்ளன பொருப்பும் நிலமும் தாழ, பரந்து எழுந்த
ஏழு-பத்தின் பெரு வெள்ளம் மகர வெள்ளத்து இறுத்ததால். 1

பொங்கிப் பரந்த பெருஞ் சேனை, புறத்தும் அகத்தும், புடை சுற்ற—
சங்கின் பொலிந்த தகையாளைப் பிரிந்த பின்பு, தமக்கு இனம் ஆம்
கொங்கின் பொலிந்த தாமரையின் குழுவும் துயில்வுற்று இதழ் குவிக்கும்
கங்குல் பொழுதும், துயிலாத கண்ணன்—கடலைக் கண்ணுற்றான். 2

திரைப் பரப்பில் குறுந் திவலையும், பிள்ளைத் தென்றலும்

'சேய காலம் பிரிந்து அகலத் திரிந்தான், மீண்டும் சேக்கையின்பால்,
மாயன், வந்தான்; கண்வளர்வான்' என்று கருதி, வரும் தென்றல்
தூய மலர்போல் நுரைத் தொகையும் முத்தும் சிந்தி, புடை சுருட்டிப்
பாயல் உதறிப் படுப்பதே ஒத்த—திரையின் பரப்பு அம்மா. 3

வழிக்கும் கண்ணீர் அழுவத்து வஞ்சி அழுங்க, வந்து அடர்ந்த
பழிக்கும் காமன் பூங் கணைக்கும் பற்றா நின்றான் பொன் தோளை,
சுழிக்கும் கொல்லன் ஊது உலையில் துள்ளும் பொறியின் சுடும், அன்னோ—
கொழிக்கும் கடலின் நெடுந் திரைவாய்த் தென்றல் தூற்றும் குறுந் திவலை.

நென்னல் கண்ட திருமேனி இன்று பிறிது ஆய், நிலை தளர்வான்-
தன்னைக் கண்டும், இரங்காது தனியே கதறும் தடங் கடல்வாய்,
பின்னல் திரைமேல் தவழ்கின்ற பிள்ளைத் தென்றல், கள் உயிர்க்கும்
புன்னைக் குறும் பூ நறுஞ் சுண்ணம் பூசாது ஒருகால் போகாதே. 5

கடற் கரையில் தோன்றிய பவளமும் முத்தும்

சிலை மேற்கொண்ட திரு நெடுந் தோட்கு உவமை மலையும் சிறிது ஏய்ப்ப,
நிலை மேற்கொண்டு மெலிகின்ற நெடியோன் தன்முன், படி ஏழும்
தலை மேல் கொண்ட கற்பினாள் மணி வாய் எள்ள, தனித் தோன்றி,
கொலை மேற்கொண்டு, ஆர் உயிர் குடிக்கும் கூற்றம் கொல்லோ—கொடிப் பவளம்?

'தூரம் இல்லை, மயில் இருந்த சூழல்' என்று மனம் செல்ல,
வீர வில்லின் நெடு மானம் வெல்ல, நாளும் மெலிவானை,—
ஈரம் இல்லா நிருதரோடு என்ன அடைவு உண்டு உனக்கு?—ஏழை
மூரல் முறுவல் குறி காட்டி, முத்தே! உயிரை முடிப்பாயோ? 7

கடலின் தோற்றம்

'இந்து அன்ன நுதல் பேதை இருந்தாள், நீங்கா இடர்; கொடியேன்
தந்த பாவை, தவப் பாவை, தனிமை தகவோ?' எனத் தளர்ந்து,
சிந்துகின்ற நறுந் தரளக் கண்ணீர் ததும்பி, திரைத்து எழுந்து,
வந்து, வள்ளல் மலர்த் தாளின் வீழ்வது ஏய்க்கும்—மறி கடலே.

பள்ளி அரவின் பேர் உலகம் பசுங் கல் ஆக, பனிக் கற்றைத்
துள்ளி நறு மென் புனல் தெளிப்ப, தூ நீர்க் குழவி முறை சுழற்றி,
வெள்ளி வண்ண நுரைக் கலவை, வெதும்பும் அண்ணல் திருமேனிக்கு
அள்ளி அப்ப, திரைக் கரத்தால் அரைப்பது ஏய்க்கும்—அணிஆழி.

கொங்கைக் குயிலைத் துயர் நீக்க, இமையோர்க்கு உற்ற குறை முற்ற,
வெங் கைச் சிலையன், தூணியினன், விடாத முனிவின் மேல்செல்லும்
கங்கைத் திரு நாடு உடையானைக் கண்டு, நெஞ்சம் களி கூர,
அம் கைத் திரள்கள் எடுத்து ஓடி, ஆர்ப்பது ஏய்க்கும்—அணி ஆழி.

மேலே செய்வன குறித்து இராமன் சிந்தித்திருத்தல்

இன்னது ஆய கருங் கடலை எய்தி, இதனுக்கு எழு மடங்கு
தன்னது ஆய நெடு மானம், துயரம், காதல், இவை தழைப்ப,
'என்னது ஆகும், மேல் வினை?' என்று இருந்தான், இராமன். இகல் இலங்கைப்
பின்னது ஆய காரியமும் நிகழ்ந்த பொருளும் பேசுவாம்: 11

## 2. இராவணன் மந்திரப் படலம்

தெய்வத் தச்சன் பிரமனோடு வந்து, எரியுண்ட இலங்கையைப் புதுப்பித்தல்

'பூ வரும் அயனொடும் புகுந்து பொன் நகர்,
மூவகை உலகினும் அழகு முற்றுற,
ஏவின இயற்றினன், கணத்தின்' என்பரால்—
'தேவரும் மருள்கொள, தெய்வத் தச்சனே.' 1

நகரின் எழில் கண்டு, உவந்த இராவணன் பிரமனுக்கும் தச்சனுக்கும் சிறப்புச் செய்து அனுப்புதல்

பொன்னினும் மணியினும் அமைந்த பொற்புடை
நல் நகர் நோக்கினன், நாகம் நோக்கினன்,
'முன்னையின் அழகு உடைத்து!' என்று, மொய் கழல்
மன்னனும், உவந்து, தன் முனிவு மாறினன். 2

முழுப் பெருந் தனி முதல் உலகின் முந்தையோன்
எழில் குறி காட்டி நின்று, இயற்றி ஈந்தனன்;—
பழிப்ப அரும் உலகங்கள் எவையும் பல் முறை
அழித்து அழித்து ஆக்குவாற்கு அரிது உண்டாகுமோ? 3

திரு நகர் முழுவதும் திருந்த நோக்கிய,
பொரு கழல், இராவணன் அயற்குப் பூசனை
வரன்முறை இயற்றி, 'நீ வழிக்கொள்வாய்' என்றான்—
அரியன தச்சற்கும் உதவி, ஆணையால். 4

சுற்றத்தார் முதலியோர் சூழ, இராவணன் ஆலோசனை மண்டபத்து வீற்றிருத்தல்

அவ் வழி, ஆயிரம் ஆயிரம் நிரைச்
செவ் வழிச் செம் மணித் தூணம் சேர்த்திய
அவ் எழில் மண்டபத்து, அரிகள் ஏந்திய
வெவ் வழி ஆசனத்து, இனிது மேயினான். 5

வரம் பெறு சுற்றமும், மந்திரத் தொழில்
நிரம்பிய முதியரும், சேனை நீள் கடல்
தரம் பெறு தலைவரும், தழுவத் தோன்றினான்—
அரம்பையர் கவரியோடு ஆடும் தாரினான். 6

முனிவர் முதலாயினாரை இராவணன் அகற்றி, மந்திரிமாரையும், நெருங்கிய உறவினரையும், உடன் இருக்கச் செய்தல்

'முனைவரும், தேவரும், மற்றும் முற்றினார்
எனைவரும், தவிர்க!' என ஏய ஆணையான்,
புனை குழல் மகளிரோடு இளைஞர்ப் போக்கினான்—
நினைவுறு காரியம் நிகழ்த்தும் நெஞ்சினான். 7

'பண்டிதர், பழையவர், கிழவர், பண்பினர்,
தண்டல் இல் மந்திரத் தலைவர், சார்க!' எனக்
கொண்டு உடன் இருந்தனன்—கொற்ற ஆணையால்
வண்டொடு காலையும் வரவு மாற்றினான். 8

ஆன்று அமை கேள்வியர்எனினும், ஆண்தொழிற்கு
ஏன்றவர் அன்பினர்எனினும், யாரையும்,
வான் துணைச் சுற்றத்து மக்கள் தம்பியர்
போன்றவர் அல்லரை, புறத்துப் போக்கினான். 9

திசைகளில் வீரரை நிறுவுதல்

திசைதொறும் நிறுவினன், உலகு சேரினும்
பிசை தொழில் மறவரை; பிறிது என் பேசுவ—
விசையுறு பறவையும், விலங்கும், வேற்றவும்,
அசைதொழில் அஞ்சின, சித்திரத்தினே? 10

இராவணன் தன் மாட்சி அழிந்தமை குறித்து, மந்திரிமாரை நோக்கிப் பேசுதல்

'தாழ்ச்சி இங்கு இதனின்மேல் தருவது என், இனி?
மாட்சி ஓர் குரங்கினால் மறுகி மாண்டதால்;
ஆட்சியும், அரசும், என் அமைவும், நன்று!' எனா,
சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் சொல்லுவான்: 11

'சுட்டது குரங்கு; எரி சூறையாடிடக்
கெட்டது, கொடி நகர்; கிளையும் நண்பரும்
பட்டனர்; பரிபவம் பரந்தது, எங்கணும்;
இட்ட இவ் அரியணை இருந்தது, என் உடல். 12

'ஊறுகின்றன கிணறு உதிரம்; ஒண் நகர்
ஆறுகின்றிலது அழல்; அகிலின் ஆவி ஒத்து,
கூறு மங்கையர் நறுங் கூந்தலின் சுறு
நாறுகின்றது நுகர்ந்திருந்த நாம் எலாம், 13

'மற்று இலதுஆயினும், ''மலைந்த வானரம்
இற்று, இலதாகியது'' என்னும் வார்த்தையும்
பெற்றிலம்; பிறந்திலம் என்னும் பேர் அலால்,
முற்றுவது என்? இனி, பழியின் மூழ்கினும்!' 14

சேனை காவலன் எழுந்து, தன் கருத்தைத் தெரிவித்தல்

என்று அவன் இயம்பலும், எழுந்து இறைஞ்சினான்,
கன்றிய, கருங் கழல், சேனை காவலன்;
'ஒன்று உளது உணர்த்துவது; ஒருங்கு கேள்!' எனா,
நின்றனன், நிகழ்த்தினன், புணர்ப்பின் நெஞ்சினான்: 15

' ''வஞ்சனை மனிதரை இயற்றி, வாள் நுதல்,
பஞ்சு அன மெல் அடி, மயிலைப் பற்றுதல்
அஞ்சினர் தொழில்'' என அறிவித்தேன்; அது
தஞ்சு என உணர்ந்திலை—உணரும் தன்மையோய்! 16

'கரன் முதல் வீரரைக் கொன்ற கள்வரை,
விரி குழல் உங்கை மூக்கு அரிந்த வீரரை,
பரிபவம் செய்ஞ்ஞரை, படுக்கலாத நீ,
''அரசியல் அழிந்தது'' என்று அயர்தி போலுமால். 17

'தண்டம் என்று ஒரு பொருட்கு உரிய தக்கரைக்
கண்டவர், பொறுப்பரோ, உலகம் காவலர்?
வண்டு உறை அலங்கலாய்! வணங்கி வாழ்வதோ,
விண்டவர் உறு வலி அடக்கும் வெம்மைதான்? 18

'செற்றவர், எதிர் எழும் தேவர், தானவர்,
கொற்றமும் வீரமும் வலியும் கூட்டு அற,
முற்றி மூன்று உலகுக்கும் முதல்வன் ஆயது,
வெற்றியோ? பொறைகொலோ? விளம்ப வேண்டுமால். 19

'விலங்கினர் உயிர் கெட விலக்கி, மேல் வர,
இலங்கையின் இனிது இருந்து, இன்பம் துய்த்துமேல்,—
குலம் கெழு காவல!—குரங்கின் தங்குமோ?
உலங்கும் நம்மேல் வரின், ஒழிக்கற்பாலதோ? 20

'போயின குரங்கினைத் தொடர்ந்து போய், இவண்
ஏயினர் உயிர் குடித்து, எவ்வம் தீர்கிலம்;
வாயினும் மனத்தினும் வெறுத்து வாழ்துமேல்,
ஓயும், நம் வலி' என, உணரக் கூறினன். 21

மகோதரனது பேச்சு

மற்று அவன் பின்னுற, மகோதரப் பெயர்க்
கல் தடந் தோளினன், எரியும் கண்ணினன்
முற்றுற நோக்கினன், 'முடிவும் அன்னதால்;
கொற்றவ! கேள்' என, இனைய கூறினன்: 22

'தேவரும் அடங்கினர்; இயக்கர் சிந்தினர்;
தா வரும் தானவர் தருக்குத் தாழ்ந்தனர்;
யாவரும், ''இறைவர்'' என்று இறைஞ்சும் மேன்மையர்
மூவரும் ஒடுங்கினர்—உனக்கு, மொய்ம்பினோய்! 23

'ஏற்றம் என் பிறிது, இனி—எவர்க்கும் இன் உயிர்
மாற்றுறும் முறைமை சால் வலியின் மாண்பு அமை
கூற்றும், ''நீ தன் உயிர் கொள்ளும் கூற்று'' எனத்
தோற்று, நின் ஏவல் தன் தலையில் சூடுமால்? 24

'வெள்ளிஅம் கிரியினை விடையின் பாகனோடு
அள்ளி, விண் தொட எடுத்து, ஆர்த்த ஆற்றலாய்!
சுள்ளியில் இருந்து உறை குரங்கின் தோள் வலிக்கு
எள்ளுதி போலும், நின் புயத்தை, எம்மொடும்? 25

'மண்ணினும், வானினும், மற்றை மூன்றினும்,
கண்ணினில் நீங்கினர் யாவர், கண்டவர்?
நண்ண அரும் வலத்தினர் நண்ணின், நாயக!
எண்ணுவது இவர்திறத்து எண்ணல் ஆகுமோ? 26

'இடுக்கு இவண் இயம்புவது என்னே? ஈண்டு எனே
விடுக்குவையாம்எனின், குரங்கை வேர்அறுத்து,
ஒடுக்க அரு மனிதரை உயிர் உண்டு, உன் பகை
முடிக்குவென் யான்' என முடியக் கூறினன். 27

வச்சிரதந்தனின் கூற்று

இச் சிரத்தவன் உரைத்து இறுக்கும் எல்லையில்,
வச்சிரத்துஎயிற்றவன் வல்லே கூறுவான்,
'அச் சிரத்தைக்கு ஒரு பொருள் அன்று' என்றனன்—
பச்சிரத்தம் பொழி பருதிக் கண்ணினன். 28

' ''போய் இனி, மனிதரைக் குரங்கைப் பூமியில்
தேயுமின், கைகளால்; தின்மின்'' என்று எமை
ஏயினே இருக்குவது அன்றி, என், இனி
ஆயும் இது? எம்வயின் அயிர்ப்பு உண்டாம்கொலோ? 29

'எவ் உலகத்தும் நின் ஏவல் கேட்கிலாத்
தெவ்வினை அறுத்து, உனக்கு அடிமை செய்த யான்
தவ்வின பணி உளது ஆகத்தான்கொலோ,
இவ் வினை என்வயின் ஈகலாது?' என்றான். 30

வச்சிரதந்தன் பேச்சைத் துன்முகன் தடுத்து, மன்னன் முகம் நோக்கிச் சொல்லியவை

'நில், நில்' என்று, அவன்தனை விலக்கி, 'நீ இவண்
என் முனும் எளியைபோல் இருத்தியோ?' என,
மன் முகம் நோக்கினன், வணங்கி, வன்மையால்,
துன்முகன் என்பவன், இனைய சொல்லுவான்: 31

'திக்கயம் வலி இல; தேவர் மெல்லியர்;
முக்கணன் கயிலையும் முரண் இன்றுயது;
மக்களும் குரங்குமே வலியர்ஆம் எனின்,
அக்கட, இராவணற்கு அமைந்த ஆற்றலே! 32

'பொலிவது, பொதுவுற எண்ணும் புன் தொழில்
மெலியவர் கடன்; நமக்கு இறுதி வேண்டுவோர்
வலியினர்எனில், அவர்க்கு ஒதுங்கி வாழ்துமோ—
ஒலி கழல் ஒருவ!—நம் உயிருக்கு அன்பினால்? 33

'கண்ணிய மந்திரம் கருதும் காவல!—
மண் இயல் மனிதரும், குரங்கும், மற்றவும்,
உண்ணிய அமைந்தன; உணவுக்கு உட்குமேல்,
திண்ணிய அரக்கரின் தீரர் யாவரே? 34

'எரி உற மடுப்பதும், எதிர்ந்துளோர் படப்
பொரு தொழில் யாவையும் புரிந்து போவதும்,
வருவதும், குரங்கு; நம் வாழ்க்கை ஊர் கடந்து,
அரிதுகொல், இராக்கதர்க்கு ஆழி நீந்துதல்? 35

'வந்து, நம் இருக்கையும், அரணும், வன்மையும்,
வெந் தொழில் தானையின் விரிவும், வீரமும்,
சிந்தையின் உணர்பவர் யாவரே சிலர்,
உய்ந்து தம் உயிர்கொடு இவ் உலகத்துள் உளார்? 36

'ஒல்வது நினையினும், உறுதி ஓரினும்,
வெல்வது விரும்பினும், விளைவு வேண்டினும்,
செல்வது அங்கு; அவருழைச் சென்று, தீர்ந்து அறக்
கொல்வது கருமம்' என்று உணரக் கூறினான். 37

துன்முகனைக் கை கவித்து அடக்கி, மாபெரும்பக்கன் பேசுதல்

காவலன் கண் எதிர், அவனைக் கை கவித்து,
'யாவது உண்டு, இனி நமக்கு?' என்னச் சொல்லினான்;
'கோவமும் வன்மையும் குரங்குக்கே' எனா,—
மாபெரும்பக்கன் என்று ஒருவன் வன்மையான். 38

'முந்தினர், முரண் இலர் சிலவர், மொய் அமர்
நந்தினர்தம்மொடு நனி நடந்ததோ?
வந்து ஒரு குரங்கு இடு தீயின் வன்மையால்,
வெந்ததோ, இலங்கையோடு அரக்கர் வெம்மையும்? 39

'மானுடர் ஏவுவார்; குரங்கு வந்து, இவ் ஊர்-
தான் எரி மடுப்பது; நிருதர், தானவர்,
ஆனவர் அது குறித்து அழுங்குவார்எனின்,
மேல் நிகழ்தக்கன விளம்ப வேண்டுமோ? 40

'நின்று நின்று, இவை சில விளம்ப நேர்கிலென்;
நன்று இனி நரரொடு குரங்கை நாம் அறக்
கொன்று தின்றல்லது, ஓர் எண்ணும் கூடுமோ?'
என்றனன்—இகல் குறித்து எரியும் கண்ணினான். 41

பிசாசன் என்ற அரக்கனின் கருத்துரை

'திசாதிசை போதும் நாம், அரசன் செய் வினை
உசாவினன், உட்கினன்; ஒழிதும் வாழ்வு' என்றான்—
பிசாசன் என்று ஒரு பெயர் பெற்ற பெய் கழல்
நிசாசரன், உருப் புணர் நெருப்பின் நீர்மையான். 42

சூரியன்பகைஞன் என்பவனது துணிபு

'ஆரியன் தன்மை ஈதுஆயின், ஆய்வுறு
காரியம் ஈதுஎனின், கண்ட ஆற்றினல்,
சீரியர் மனிதரே; சிறியம் யாம்' என,
சூரியன்பகைஞன் என்று ஒருவன், சொல்லினன். 43

வேள்வியின்பகைஞனது உரை

'ஆள்வினை நிலைமையும், அரக்கர் ஆற்றலும்,
தாழ் வினை இதனின்மேல் பகரத் தக்கதோ?
சூழ் வினை மனிதரால் தோன்றிற்றும்!' என,
வேள்வியின்பகைஞனும் உரைத்து, வெள்கினன். 44

புகைநிறக்கண்ணன் புகன்ற மொழி

'தொகை நிலைக் குரங்குடை மனிதர்ச் சொல்லி என்?
சிகை நிறச் சூலிதன் திறத்தின் செல்லினும்,
நகை உடைத்தாம்; அமர் செய்தல் நன்று' என,
புகைநிறக்கண்ணனும் புகன்று, பொங்கினன். 45

மற்றுள்ள அரக்கர்களின் மனக் கருத்து

மற்று அவன் பின்னுற, மற்றையோர்களும்,—
'இற்றிதுவே நலம்; எண்ணம் மற்று இல்' என்று,
உற்றன உற்றன உரைப்பதுஆயினர்—
புற்று உறை அரவு எனப் புழுங்கு நெஞ்சினர். 46

கும்பகருணனின் கூற்று

வெம்பு இகல் அரக்கரை விலக்கி, 'வினை தேரா
நம்பியர் இருக்க!' என, நாயகனை முன்னு,
'எம்பி எனகிற்கில், உரைசெய்வல் இதம்' என்னு,
கும்பகருணப் பெயரினன் இவை குறித்தான்: 47

'நீ அயன் முதல் குலம் இதற்கு ஒருவன் நின்றாய்;
ஆயிரம் மறைப் பொருள் உணர்ந்து, அறிவு அமைந்தாய்;
தீயினை நயப்புறுதல் செய்வினை தெரிந்தாய்;
ஏயின உறத் தகைய இத்துணையவேயோ? 48

'ஓவியம் அமைந்த நகர் தீ உண, உலைந்தாய்,
''கோ-இயல் அழிந்தது'' என; வேறு ஒரு குலத்தான்
தேவியை நயந்து, சிறை வைத்த செயல் நன்றோ?
பாவியர் உறும் பழி இதின் பழியும் உண்டோ? 49

' ''நல் நகர் அழிந்தது'' என நாணினை; நயத்தால்
உன் உயிர் எனத்தகைய தேவியர்கள் உன்மேல்
மன் நகை தரத் தர, ஒருத்தன் மனை உற்ருள்,
பொன் அடி தொழத் தொழ, மறுத்தல் புகழ் போலாம்? 50

'என்று ஒருவன் இல் உறை தவத்தியை, இரங்காய்,
வன் தொழிலினுய், மறை துறந்து, சிறை வைத்தாய்,
அன்று ஒழிவதாயின, அரக்கர் புகழ்; ஐய!
புன் தொழிலினுர் இசை பொறுத்தல் புலமைத்தோ? 51

'ஆசு இல் பர தாரம்அவை அம் சிறை அடைப்பேம்;
மாசு இல் புகழ் காதலுறுவேம்; வளமை கூரப்
பேசுவது மானம்; இடை பேணுவது காமம்;
கூசுவது மானுடரை; நன்று, நம கொற்றம்! 52

'சிட்டர் செயல் செய்திலை; குலச் சிறுமை செய்தாய்;
மட்டு அவிழ் மலர்க் குழலினளை இனி, மன்ன!
விட்டிடுதுமேல், எளியம் ஆதும்; அவர் வெல்ல,
பட்டிடுதுமேல், அதுவும் நன்று; பழி அன்ருல். 53

'மரன் படர் வனத்து ஒருவனே சிலை வலத்தால்,
கரன் படை படுத்து, அவனை வென்று, களை கட்டான்;
நிரம்பிடுவது அன்று, அதுவும்; நின்றது, இனி நம்பால்
உரம் படுவதே; இதனின்மேல் உறுதி உண்டோ? 54

'வென்றிடுவர் மானுடவரேனும், அவர்தம்மேல்
நின்று, இடைவிடாது நெறி சென்று, உற நெருக்கித்
தின்றிடுதல் செய்கிலம்எனின், செறுநரோடும்
ஒன்றிடுவர் தேவர்; உலகு ஏழும் உடன் ஒன்று ஆம். 55

'ஊறு படை ஊறுவதன் முன்னம், ஒரு நாளே,
ஏறு கடல் ஏறி, நரர் வானரரை எல்லாம்
வேறு பெயராதவகை, வேரொடும் அடங்க
நூறுவதுவே கருமம்' என்பது நுவன்ருன். 56

கும்பகருணன் கூற்றிற்கு இராவணன் இசைந்து, 'போருக்கு எழுக!' என்றல்

'நன்று உரைசெய்தாய் —குமர!— நான் இது நினைந்தேன்;
ஒன்றும் இனி ஆய்தல் பழுது; ஒன்னலரை எல்லாம்
கொன்று பெயர்வோம்; நமர் கொடிப் படையை எல்லாம்,
''இன்று எழுக '' என்க!' என இராவணன் இசைத்தான். 57

இந்திரசித்து தன் தந்தையின் செயலைத் தடுத்து, ஒன்று கூறுதல்

என்று அவன் இயம்பியிடும் எல்லையினில், 'வல்லே
சென்று படையோடு, சிறு மானுடர் சினப் போர்
வென்று பெயர்வாய், அரச! நீ கொல்? என வீரம்
நன்று பெரிது!' என்று மகன் நக்கு, இவை நவின்றான்: 58

'ஈசன் அருள் செய்தனவும், ஏடு அவிழ் மலர்ப் பேர்
ஆசனம் உவந்தவன் அளித்தனவும், ஆய
பாசம் முதல் வெம் படை சுமந்து, பலர் நின்றார்;
ஏச உழல்வேன் ஒருவன் யானும் உளென் அன்றோ? 59

'முற்றும் உளது ஆம் உலகம் மூன்றும், எதிர் தோன்றிச்
செற்ற முதலாரொடு செறுத்தது ஓர் திறத்தும்,
வெற்றி உனது ஆக விளையாதுஒழியின், என்னைப்
பெற்றும் இலை; யான் நெறி பிறந்தும் இலென்' என்றான். 60

'குரங்கு பட, மேதினி குறைத்தலை நடப் போர்
அரங்கு பட, மானுடர் அலந்தலை பட, பார்
இரங்கு படர் சீதை பட, இன்று இருவர் நின்றார்
சிரம் குவடு எனக் கொணர்தல் காணுதி—சினத்தோய்! 61

'சொல்லிடை கிழிக்கில, சுருங்கிய குரங்கு என்
கல்லிடை கிழிக்கும் உருமின் கடுமை காணும்
வில்லிடை கிழித்த மிடல் வாளி வெருவி, தம்
பல்லிடை, கிழித்து இரிவ கண்டு, பயன் உய்ப்பாய். 62

'யானை இலர்; தேர் புரவி யாதும் இலர்; ஏவும்
தானை இலர்; நின்ற தவம் ஒன்றும் இலர்; தாமோ,
கூனல் முதுகின் சிறு குரங்கு கொடு வெல்வார்?
ஆனவரும் மானுடர்; நம் ஆண்மை அழகு அன்றோ? 63

'நீரும், நிலனும், நெடிய காலும், நிமிர் வானும்,
பேர் உலகில் யாவும், ஒரு நாள் புடைபெயர்த்தே,
யாரும் ஒழியாமை, நரர் வானரரை எல்லாம்,
வேரும் ஒழியாதவகை வென்று அலது, மீளேன்.' 64

என்று, அடி இறைஞ்சினன் எழுந்து, 'விடை ஈமோ,
வன் திறலினாய்!' எனலும், வாள் எயிறு வாயில்
தின்றனன் முனிந்து, நனி தீவினையை எல்லாம்
வென்றவரின் நன்று உணரும் வீடணன் விளம்பும்: 65




இந்திரசித்து கூறியதைக் கண்டித்து, வீடணன் வி[illegible] பேருரை

'நூலினுல் நுணங்கிய அறிவு நோக்கினை
போலுமால்!—உறு பொருள் புகலும் பூட்சியோய்!
காலம், மேல் வினை பொருள், உணரும் கற்பு இலாப்
பால!—நீ இனையன பகரற்பாலேயோ? 66

'கருத்து இலான், கண் இலான், ஒருத்தன் கைக்கொடு
திருத்து வான் சித்திரம் அனைய செப்புவாய்;
விருத்தர், மேதகையவர், வினைஞர், மந்திரத்து
இருத்தியோ?—இளமையால் முறைமை எண்ணலாய்! 67

'தூயவர் முறைமையே தொடங்கும் தொன்மையர்
ஆயவர் நிற்க; மற்று அவுணர் ஆதியர்,
தீயவர், அறத்தினுல் தேவர் ஆயது
மாயமோ? வஞ்சமோ? வன்மையேகொலோ? 68

'அறம் துறந்து, அமரரை வென்ற ஆண்தொழில்-
திறம் தெரிந்திடின், அதுதானும் செய் தவம்
நிறம் திறம்பாவகை இயற்றும் நீதியால்,
மறம் துறந்து, அவர் தரும் வரத்தின் வன்மையால். 69

'மூவரை வென்று, மூன்று உலகும் முற்றுறக்
காவலில்நின்று, தம் களிப்புக் கைம்மிக,
வீவது முடிவு என வீந்தது அல்லது,
தேவரை வென்றவர் யாவர், தீமையோர்? 70

'வினைகளை வென்று, மேல் வீடு கண்டவர்
எனைவர் என்று இயம்புகேன், அவர்தம் ஈகையால்?
முனைவரும் அமரரும், முன்னும் பின்னரும்,
அனையவர் திறத்து உளர் யாவர், ஆற்றினுர்? 71

'பிள்ளைமை விளம்பினை, பேதை நீ' என
ஒள்ளிய புதல்வனை உரப்பி, 'என் உரை
எள்ளலையாம்எனின், இயம்பல்ஆற்றுவென்,
தெள்ளிய பொருள்' என அரசற் செப்பினுன்: 72

'எந்தை நீ; யாயும் நீ; எம்முன் நீ; தவ
வந்தனைத் தெய்வம் நீ; மற்றும் முற்றும் நீ;
''இந்திரப் பெரும் பதம் இழக்கின்றுய்'' என
நொந்தனென்ஆதலின், நுவல்வதுஆயினேன். 73

'கற்றுறு மாட்சி என்கண் இன்றாயினும்,
உற்று உறு பொருள் தெரிந்து உணர்தல் ஓயினும்,
சொற்றுறு சூழ்ச்சியின் துணிவு சோரினும்,
முற்றுறக் கேட்ட பின், முனிதி—மொய்ம்பினோய்! 74

'கோநகர் முழுவதும், நினது கொற்றமும்,
சானகி எனும் பெயர் உலகின் தம்மனை
ஆனவள் கற்பினால், வெந்தது அல்லது, ''ஓர்
வானரம் சுட்டது'' என்று உணர்தல் மாட்சியோ? 75

'எண்பொருட்டு ஒன்றி நின்று, எவரும் எண்ணினால்,
விண்பொருட்டு ஒன்றிய உயர்வு மீட்சியும்,
பெண்பொருட்டு அன்றியும், பிறிது உண்டாம்எனின்,
மண்பொருட்டு அன்றியும், வரவும் வல்லவோ? 76

' ''மீனுடை நெடுங் கடல் இலங்கை வேந்து என்பான்
தானுடை நெடுந் தவம் தளர்ந்து சாய்வது, ஓர்
மானுட மடந்தையால்'' என்னும் வாய்மொழி—
தேனுடை அலங்கலாய்!—இன்று தீர்ந்ததோ? 77

'ஏறிய நெடுந் தவம் இழைத்த எல்லை நாள்,
ஆறிய பெருங் குணத்து அறிவன் ஆணையால்,
கூறிய மனிதர்பால் கொற்றம் கொள்ளலை;
வேறு இனி அவர்வயின் வென்றி யாவதோ? 78

'ஏயது பிறிது உணர்ந்து இயம்ப வேண்டுமோ?
நீ ஒரு தனி உலகு ஏழும் நீந்தினாய்;
ஆயிரம் தோளவற்கு ஆற்றல் தோற்றனை
மேயினை ஆம்; இனி, விளம்ப வேண்டுமோ? 79

'மேல் உயர் கயிலையை எடுத்த மேலைநாள்,
நாலு தோள் நந்திதான் நவின்ற சாபத்தால்,
கூல வான் குரங்கினால் குறுகும், கோள்; அது
வாலிபால் கண்டனம்—வரம்பு இல் ஆற்றலாய்! 80

'தீயிடைக் குளித்த அத் தெய்வக் கற்பினாள்
வாயிடை மொழிந்த சொல் மறுக்க வல்லமோ?
''நோய் உனக்கு யான்'' என நுவன்றுளாள் அவள்;
ஆயவள் சீதை, பண்டு அமுதின் தோன்றினாள். 81

'சம்பரப் பெயருடைத் தானவர்க்கு இறைவனைத் தனு வலத்தால்,
அம்பரத்தூடு புக்கு, அமரிடைத் தலை துமித்து, அமரர் உய்ய,
உம்பருக்கு இறைவனுக்கு அரசு அளித்து உதவினன்—ஒருவன், நேமி
இம்பரில் பணி செய, தசரதப் பெயரினன், இசை வளர்த்தான்; 82

'மிடல் படைத்து, ஒருவனாய், அமரர் கோன் விடையதா வெரிநின் மேலாய்,
உடல் படைத்து அவுணர்ஆயினர் எலாம் மடிய, வாள் உருவினானும்,
அடல் படைத்து, அவனியை, ''பெரு வளம் தருக!'' என்று அருளினானும்,
கடல் படைத்தவரொடும், கங்கை தந்தவன் வழிக் கடவுள் மன்னன்,

'பொய் உரைத்து உலகினில் சினவினார் குலம் அறப் பொருது, தன் வேல்
நெய் உரைத்து, உறையில் இட்டு, அறம் வளர்த்து, ஒருவனாய் நெறியில் நின்றான்,
மை உரைத்து உலவு கண் மனைவிபால் வரம் அளித்து, அவை மறாதே,
மெய் உரைத்து, உயிர் கொடுத்து, அமரரும் பெறுகலா வீடு பெற்றான்.

'அனையவன் சிறுவர், எம் பெரும! உன் பகைஞரால்; அவரை அம்மா
இனையர் என்று உணர்தியேல், இருவரும் ஒருவரும் எதிர் இலாதார்;
முனைவரும் அமரரும், முழுது உணர்ந்தவர்களும், முற்றும் மற்றும்,
நினைவு அருந் தகையர்; நம் வினையினால் மனிதர் ஆய், எளிது நின்றார்.

'கோசிகப் பெயருடைக் குல முனித் தலைவன், ''அக் குளிர் மலர்ப் பேர்
ஆசனத்தவனொடு எவ் உலகமும் தருவென்'' என்று அமையலுற்றான்,
ஈசனின் பெறு படைக்கலம், இமைப்பு அளவில் எவ் உலகில் யாவும்
நாசம் உற்றிட நடப்பன, கொடுத்தன பிடித்துடையர்—நம்ப! 86

'எறுழ் வலிப் பொரு இல் தோள் அவுணரோடு அமரர், பண்டு, இகல் செய் காலத்து,
உறு திறல் கலுழன்மேல் ஒருவன் நின்று அமர் செய்தானுடைய வில்லும்,
தெறு சினத்தவர்கள் முப்புரம் நெருப்புற உருத்து எய்த அம்பும்,
குறுமுனிப் பெயரினன், நிறை தவர்க்கு இறை, தரக் கொண்டு நின்றார்.

'நாவினால் உலகை நக்கிடுவ; திக்கு அளவிடற்கு உரிய; நாளும்,
மேவு தீ விடம் உயிர்ப்பன; வெயில் பொழி எயிற்றன; அ(வ்) வீரர்
ஆவம் ஆம் அரிய புற்று உறைவ;—முற்று அறிவருக்கு அழிவு செய்யும்
பாவ காரியர் உயிர்ப் பதம் அலால், இரை பெறா—பகழி நாகம். 88

'பேருமோ ஒருவரால், அவர்களால் அல்லது? இவ் பெரியவேனும்,
நாரும் ஓரியும் அறா; நம்முடைச் சிலைகள்போல் நலிவ ஆமோ?
தாருவோ, வேணுவோ, தானுவாய் உலகினைத் தழுவி நிற்கும்
மேருவோ, மால் வரைக் குலம் எலாம் அல்லவோ, வில்லும் மன்னோ?89

'உரம் ஒருங்கியது, நீர் கடையும் வாலியது மார்பு; உலகை மூடும்
மரம் ஒருங்கிய; கராதியர், விராதனது மால் வரைகள் மானும்
சிரம் ஒருங்கிய; இனிச் செரு ஒருங்கியதுஎனின், தேவர் என்பார்
பரம் ஒருங்குவது அலால், பிறிது ஒருங்காதது ஓர் பகையும் உண்டோ?

'சொல் வரம் பெரிய மா முனிவர் என்பவர்கள், தம் துணை இலாதார்,
''எல் வரம் பெரிய தோள் இருவரே தமரொடும் உலகம் யாவும்
வெல்வர்'' என்பது தெரிந்து, எண்ணினர், ''நிருதர் வேர் முதலும் வீயக்
கொல்வர்'' என்று உணர்தலால், அவரை வந்து அணைவது ஓர் இயைபு கொண்டார்.

'துஞ்சுகின்றிலர்களால், இரவும் நன் பகலும், நிற் சொல்ல ஒல்கி,
நெஞ்சு நின்று அயரும் இந் நிருதர்; ''பேர் சனகி ஆம் நெடியது ஆய
நஞ்சு தின்றனர்கள்தாம் நண்ணுவார் நரகம்'' என்று எண்ணி, நம்மை
அஞ்சுகின்றிலர்கள்—நம் அருள் அலால், சரண் இலா அமரர் அம்மா!

,புகல் மதித்து உணர்கிலாமையின், நமக்கு எளிமை சால் பொறைமை கூர,
நகல் மதிக்கில மறுப் பொலிய வாள் ஒளி இழந்து, உய்தல் நண்ணும்
பகல் மதிக்கு உவமை ஆயின எலாம், இரவு கால் பருவ நாளின்
அகல் மதிக்கு உவமை ஆயினகொலோ, அமரர்தம் வதனம் அம்மா?

'சிந்து முந்து உலகினுக்கு இறுதி புக்கு, உரு ஒளித்து, உலைதல் செய்வார்,—
இந்துவின் திரு முகத்து இறைவி நம் உறையுளாள் என்னலோடும்,—
அந்தகன் முதலினோர், அமரரும் முனிவரும் பிறரும், அஞ்சார்
வந்து, நம் நகரமும் வாழ்வையும் கண்டு உவந்து, அகல்வர் மன்னோ.

'சொலத் தகாத் துன்னிமித்தங்கள் எங்கணும் வரத் தொடர்வ; தொல் நாள்,
வெலத் தகா அமரரும் அவுணரும், செருவில் விட்டன விடாத
குலத்த கால் வய நெடுங் குதிரையும், அதிர் மதக் குன்றும், இன்று
வலத்த கால் முந்துறத் தந்து, நம் மனையிடைப் புகுவ மன்னோ. 95

'வாயினும் பல்லினும் புனல் வறந்து உலறினர், நிருதர்; வைகும்
பேயினும் பெரிய பேம் நரிகளும் திரிதரும்; பிறிதும் எண்ணின்,
கோயிலும் நகரமும், மட நலார் குழலும், நம் குஞ்சியோடும்,
தீயின் வெந்தன; இனி, துன்னிமித்தம் பெறும் திறனும் உண்டோ?

'சிந்த மா நாகரைச் செரு முருக்கிய கரன், திரிசிரத்தோன்,
முந்த மான் ஆயினன், வாலியே, முதலினோர் முடிவு கண்டால்,
அந்த மான் இடவனோடு, ஆழி மா வலவனும், பிறரும், ஐயா!
இந்த மானிடவராம் இருவரோடு எண்ணல் ஆம் ஒருவர் யாரே? 97

'இன்னம் ஒன்று உரை செய்கேன்; இனிது கேள், எம்பிரான்! இருவர் ஆய
அன்னவர் தம்மொடும் வானரத் தலைவராய் அணுகி நின்றார்,
மன்னும் நம் பகைஞர் ஆம் வானுளோர்; அவரொடும் மாறுகோடல்
கன்மம் அன்று; இது நமக்கு உறுதி என்று உணர்தலும், கருமம் அன்றால்.

'இசையும் செல்வமும் உயர் குலத்து இயற்கையும் எஞ்ச,
வசையும் கீழ்மையும் மீக்கொள, கிளையொடும் மடியாது,
அசைவு இல் கற்பின் அவ் அணங்கை விட்டருளுதி; அதன் மேல்
விசையம் இல்' எனச் சொல்லினன்—அறிஞரின் மிக்கான். 99

இராவணன் சினந்து நக்கு, வீடணனைக் கடிந்து பேசுதல்

கேட்ட ஆண்தகை கரத்தொடு கரதலம் கிடைப்பப்
பூட்டி, வாய்தொறும் பிறைக் குலம் வெண் நிலாப் பொழிய,
நாட்டம் தீ எழ, நலம் திகழ் ஆரமும் மார்பும்
தோள் தடங்களும் குலுங்க, நக்கு, இவை இவை சொன்னான்: 100

' ''இச்சை அல்லன உறுதிகள் இசைக்குவென்'' என்றாய்;
பிச்சர் சொல்லுவ சொல்லினை; என் பெரு விறலைக்
கொச்சை மானுடர் வெல்குவர் என்றனை; குறித்தது,
அச்சமோ? அவர்க்கு அன்பினோ? யாவதோ?—ஐயா! 101

' ''ஈங்கு மானுடப் புழுக்களுக்கு, இலை வரம்'' என்றாய்;
தீங்கு சொல்லினை; திசைகளை உலகொடும் செருக்கால்
தாங்கும் யானையைத் தள்ளி, அத் தழல் நிறத்தவனை
ஓங்கல் ஒன்றொடும் எடுக்க, முன் வரம் கொண்டது உண்டோ? 102

'மனக்கொடு அன்றியும், வறியன வழங்கினை; வானோர்
சினக் கொடும் படை செருக்களத்து என்னை என் செய்த?
எனக்கு நிற்க; மற்று, என்னொடு இங்கு ஒரு வயிற்று உதித்த
உனக்கு மானிடர் வலியர் ஆம் தகைமையும் உளதோ? 103

'சொல்லும் மாற்றங்கள் தெரிந்திலை; பல முறை தோற்று,
வெல்லும் ஆற்றலும் ஒரு முறை பெறுக தாம்; விண்ணைக்
கல்லும் ஆற்றலேன்; ''கிளையையும் என்னையும் களத்தில்
கொல்லும் மாற்றலர் உளர்'' எனக் கோடலும் கோளே? 104

'தேவரின் பெற்ற வரத்தினது என் பெருஞ் செருக்கேல்,
மூவரில் பெற்றம் உடையவன் தன்னையும், முழுதும்
காவலின் பெற்ற திகிரியான் தன்னொடும், கடந்தது
ஏவரின் பெற்ற வரத்தினால்? இயம்புதி—இளையோய்! 105

''நந்தி சாபத்தின் நமை அடும், குரங்கு'' எனின், நம்பால்
வந்த சாபங்கள் எனைப் பல; அவை செய்த வலி என்?
இந்திராதியர், சித்தர்கள், இயக்கர், நம் இறுதி
சிந்தியாதவர் யார்? அவை நம்மை என் செய்த? 106

'அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டுடை வரம் அறியேன்;
இரங்கி யான் நிற்ப, என் வலி அவன்வயின் எய்த,
வரம் கொள் வாலிபால் தோற்றனென்; மற்றும் வேறு உள்ள
குரங்கு எலாம் எனை வெல்லும் என்று எங்ஙனம் கோடி? 107

'நீலகண்டனும் நேமியும் நேர் நின்று பொரினும்,
ஏலும் அன்னவருடை வலி அவன்வயின் எய்தும்;
சால அன்னது நினைந்து, அவன் எதிர் செலல் தவிர்ந்து,
வாலிதன்னை, அம் மனிதனும், மறைந்து நின்று எய்தான். 108

'ஊன வில் இறுத்து, ஓட்டை மா மரத்துள் அம்பு ஓட்டி,
கூனி சூழ்ச்சியால் அரசு இழந்து, உயர் வனம் குறுகி,
யான் இழைத்திட இல் இழந்து, உயிர் சுமந்து இருந்த
மானுடன் வலி, நீ அலாது, யார் உளர் மதித்தார்?' 109

'போருக்குப் புறப்படுவோம்' என்ற இராவணனை நெருங்கி, வீடணன் மேலும் உறுதிமொழி உரைத்தல்

என்று தன் உரை இழித்து, 'நீ உணர்விலி' என்று,
'நன்று போதி; நாம் எழுக!' எனும் அரக்கனை நணுகி,
'ஒன்று கேள், இனம் உறுதி' என்று, அன்பினன், ஒழியான்,
துன்று தாரவன், பின்னரும், இனையன சொன்னான்: 110

'தன்னின் முன்னிய பொருள் இலா ஒரு தனித் தலைவன்,
அன்ன மானுடன் ஆகி வந்து, அவதரித்து அமைந்தான்,
சொன்ன நம்பொருட்டு, உம்பர்தம் சூழ்ச்சியின் துணிவால்;
இன்னம் ஏகுதி போலும்' என்று அடி தொழுது இரந்தான். 111

இராவணன் மறுமொழி

அச் சொல் கேட்டு, 'அவன் ஆழியான் என்றனை; ஆயின்,
கொச்சைத் துன்மதி எத்தனை போரிடைக் குறைந்தான்?
இச்சைக்கு ஏற்றன, யான் செய்த இத்தனை காலம்,
முச்சு அற்றான்கொல், அம் முழுமுதலோன்?' என முனிந்தான். 112

'இந்திரன்தனை இருஞ் சிறை இட்ட நாள், இமையோர்
தந்தி கோடு இறத் தகர்த்த நாள், தன்னை யான் முன்னம்
வந்த போர்தொறும் துரந்த நாள், வானவர் உலகைச்
சிந்த வென்ற நாள், சிறியன்கொல், நீ சொன்ன தேவன்? 113

